அந்தகாரங் குகையி லாயிரநா ளிருந்தாலுஞ்
செந்தீபங் கண்டவுடன் றீர்வதுபோ லென்றவரோ. (ருஅ)

கருமயோ கந்தவமே காரணமா நீங்காம
லருமையா ஞானம்வந்தோ வஞ்ஞானம் போமெனவே. (ருகூ)

குத்துவெட்டும் படைகளினாற் கூடுமோ விருடிரக்க
வுத்தமமாம் ரவியுதித்தா லோடுமிரு ளென்றவரோ. (சு0)

அஞ்ஞான விருடிரக்க வறியாத நல்லகன்ம
மெய்ஞ்ஞானந் தனைப்பலிக்கும் விதமெவ்வா றெனவினவ. ()

கரும மிருவகையாங் காமியநிட் காமியமென்
றிருவகையி னிட்காம மேதுகா ணென்றவரோ. (சுஉ)

கருமமே காரணமாய்க் கட்டுரைத்தீ ரிவ்வுலகை
யொருவும் வகையையெமக் கோதென் றடிபணிய. (சுங)

இந்திரசா லம்போல விவ்வுலகை நம்மிடத்திற்
றந்திரமாய்த் தோற்றுவித்தோஞ் சத்தியமல வென்றவரோ. ()

மித்தையெனுஞ் சகத்துநின்பால் விளங்குமோ வெனவினவச்
சுத்திதனி லேரசிதந் தோன்றுதல்போ லென்றவரோ. (சுரு)

அயல்வெள்ளி சுத்தியின்மே லாரோ பிதங்கூடு
மியலுள்ள சகமுமுன்வே றிருந்ததுமுண் டோவெனவே. ()

மனமயக்கம் பிடிக்கிலில்லா வத்துவுந்தோன் றிடுமதுவோ
கனவில்விண்ணிற் றான்பறக்கக் கண்டதுபோ லென்றவரோ.()

கனவுபோற்பிரபஞ்சமென்றீர்கண்விழித்தாற்கனவுபொய்யாம்
வினவுசகந் தினமுமெய்யாய் விளங்குவதென்சொல்லுமென.()

மெய்யாக விளங்குவது மெய்ஞ்ஞானம் வருமளவும்
பொய்யாம்பின் கனவதுபோற் போதம்வரி லென்றவரோ. ()

முன்புகண்ட கனவுபொய்யா மொழிசாக்ரம் போலவென்றீர்
பின்புமுத்தித் தசையடைந்தும் பிரபஞ்சநிற்ப தேதெனவே()



தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம் போல்வதல்லாற்
பரந்தசகங் காரியத்திற் பயன்படா தென்றவரோ. (எக)

கன்மவினை யஞ்ஞானங் கடந்துமதன் காரியமாம்
புன்மையுறு மெய்யுடனே போகாத தேதெனவே. (எஉ)

வெட்டவிழு மரம்பசந்து விளங்குதல்போற் சிலகால
நட்டகன்ம மாய்ந்துமங்க நடத்திடுங்கா ணென்றவரோ. (எங)

சென்மம்போய் முத்தியினைச் சேரச் சிலரிருக்கத்
தொன்மையான் மாப்பலவோ சொரூபம் பகருமென. (எச)

பிரமமென்று மீசனென்றும் பெருகுபல சீவனென்று
முரைமயக்க மலதான்மா வொருவனே யென்றவரோ. (எரு)

ஏகந்தா னான்மா வெனும்வகையே மெய்யானு
லாகந்தோ றும்பலவா யமர்ந்ததென்னே சொல்லுமென. ()

பலகடத்திற் சலத்தூடு பானுவிம்பந் தோன்றுதல்போற்[ரோ.
றுலைவில்புத்தி தொறுமான்மாத் தோன்றுதல்கா ணென்றவ

ஆதித்தன் போலான்மா வளவில்புத்தி தொறுந்தோன்றிற்
சாதிக்கு முத்தியெவர் தமக்கதனைச் சாற்றுமென. (எஅ)

பந்தமுத்தி தானுமந்தப் பரந்தபுத்தி தனக்கேயா
மந்தவிம்பந் தனக்கிலையென் றறிவுவரச் சொன்னவரோ. ()

பரமேக மாயுமதிற் பலசீவ ரேதெனவே
யொருகடலிற் பலகுமிழி யுதிப்பதுபோ லென்றவரோ. (அ0)

சீவனது தானென்றுஞ் சேரும் பிரமமென்று
மாவதுவோ பேரின்ப மாங்கதெனக் கோதுமென. (அக)

ஏகம் பிரம மிரண்டிலைநீ வேறுமல
சோகமுறும் பேதமறிற் றோன்றுமின்ப மென்றவரோ. (அஉ)

சீவபேதம் போமோ சித்தொன்று மோவெனவே
யாவன்மன மறஞ்சுழுத்தி யவத்தையிற்பா ரென்றவரோ. ()

பேதமல விவ்வுலகம் பிரமமய மென்றறிந்தும்
பூதமய மாய்த்தோற்றல் போகாத தேதெனவே. (௮௪)
கானலைநீ ரென்றோடிக் கண்டவர்க்குத் தீர்ந்தபின்னும்
வானுலைவு நீராகி வயங்குதல்போ லென்றவரோ. (௮௫)
அறிவானு நல்லறிவு மறியப் படும்பொருளும்
பிறிவாய்மூன் றாயிருத்தல் பேதமல வோவெனவே. (௮௬)
சொப்பனத்திற் றனித்தொருவன் றோற்றம்வே றில்லையங்கே
கற்பனையாம் பொருளறிவு காண்பவன்போ லென்றவரோ. ()
கற்பனையாம் பேதங்கள் காணாமற் போம்வகையை
விற்பனமா நானறிய விளம்புமென வேவணங்க. (௮௮)
துரியமாம் யோகத்தாற் றாயமனம் லயமானா
லரியமூ வகைவிகற்ப மழியுமென்று சொன்னவரோ. (௮௯)
சிறந்திருக்கு மான்மாவுஞ் செகமெல்லா நிறைந்திருந்து
மறைந்தெனக்குத் தோன்றாத வகையேது சொல்லுமென. ()
சத்துச்சித் தாநந்தந் தான்மூன்று மதனுடனே
யொத்துற்று நாம வுருவஞ் சகமாகி. (௯௧)
இருக்கையினிற் றொன்றா திவைமூன்றும் பிரமமென
மரிக்கில்வரும் பின்னிரண்டு மறிசகமென் றுரைத்தவரோ. ()
அறிந்துகொண் ஞானத்தாலே யான்மாவை யென்றுரைத்தீர்
சிறந்தொளிரு மான்மாவுந் திரிசியமா மோவெனவே. (௯௩)
முந்தியஞா னத்தாலே முதிருமஞ்ஞா னந்துறக்கிற்
சிந்தையிலான் மாச்சுயமாய்த் திகழுமென்று சொன்னவரோ.
இனியமுத்திச் சுகமிருப்ப தெப்படியென் றேவினவ
வனுபவத்தி லறிவிடயா னந்தம்போ லென்றவரோ. (௯௫)
மனலயம்வந் தவரலது மற்றிலரோ முத்தரெனச்
சனகனைப்போற் சீவன்முத்தர் தாமுமுள ரென்றவரோ. ()



சீவன்முத்தி யடைந்தோர்கள் செயலுமவர் தங்குணமு
நாவுரைக்கும் வாசகமு நானறியச் சொல்லுமென. (௯௭)
வருங்கருவு பிறப்பினொடு வளர்தல்பருத் தல்குறைத [ரோ.
லொருங்கலுமெய்க் கென்றதனை யொறுத்திருப்பா ரென்றவ
பார்ப்பதுவுங் கேட்பதுவும் பகர்வதுவுஞ் செல்வதுவு
மேற்பதுவுங் கரணதன்ம மெனத்தவிர்ந்தா ரென்றவரோ. ()
பசிதாக முயிர்க்கெனவே பயந்துக்கஞ் சுகங்காமம்
வசிகோப மதிக்கெனவே மகிழ்ந்திருப்பா ரென்றவரோ.(௧௦௦)
வீடுந்தா ரமுமுறவு மேவியென்று மிருந்தாலு
நீடுந்தா மரையிலைநீர் நிகராவா ரென்றவரோ. (௧௦௧)
பற்றிடுங்கா யமுந்தானும் பன்னாளொன் றாயினும்பி
னுற்றபுளி யம்பழமு மோடுமொப்பா ரென்றவரோ. (௧௦௨)
கூறுமுல கியற்கையுடன் கூடினுமெய்ஞ் ஞானம்வந்தோர்
சேறும்பிள்ளைப் பூச்சியும்போற் றிரிவார்கா ணென்றவரோ.()
ததியூடு கடைந்தவெண்ணெய் தான்மோரிற் கிடப்பதுபோன்
மதியோடு கூடினும்பின் மயங்கார்கா ணென்றவரோ. (௧௦௪)
அருச்சுனன்றன் பொருட்டாக வனைவருக்கு ஞானம்வரப்
பொருந்தியதே சிகவடிவாம் புண்ணியரே கண்வளரீர். (௧௦௫)
ஆயர் குலமாத ரளவிலாரைப் புணர்ந்துந்
தூய பதினாறா யிரவருடன் றோய்ந்திருந்தும். (௧௦௬)
பரம முனிவர்முன்னே பரிச்சித்தைத் தீண்டியன்று
பிரமசரி யஞ்செலுத்தும் பேரொளியே கண்வளரீர். (௧௦௭)

வெண்பா.

ஆதிமூ லம்விசயற் காதிமறை யின்பொருளை
யோதியு ணர்த்துமிந்த வுண்மைதனைக்-காதலுற்றுக்
கற்றோருங் கேட்டோருங் காசினியில் வாழ்ந்துமுத்தி
பெற்றோர்கண் முத்தர்பெறும் பேறு. (௧௦௮)

கீதாசாரத் தாலாட்டுப் பிரபந்தம் முற்றிற்று.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.
விருத்தாசலபுராணத்திலுள்ள

# சசிவர்ணன் சரித்திரம்.

நாரணன்றன்னைநோக்கி நம்பர்தாமருளிச்செய்வார்
சீரணிதவத்தினோர்கள் சேவையின்பெருமைகேளீ
ரேரணிபாவவெச்ச னென்றொருமறையோன்மைந்தன்
னூரணிதன்னிற்பாவி சசிவர்ணனென்பான்மன்னோ. (௧)

பத்தரையும்மையெம்மைப் பரவுவேதத்தைநீற்றை
மெய்த்தருமத்தைநிந்தை விளம்புவதவன்றன்கல்வி
நித்தலுங்களவுசெய்து நியமந்தன்னடுத்தார்தம்மைக்
குத்திரஞ்செய்தருனே குலாசாரமாவதம்மா. (௨)

மாதரைக்கிளைஞர்தம்மை வாலரைக்கருவைக்கோவை
வேதியர்தம்மைக்கொல்லும் விரதமேவிரதநல்ல
நீதிகளுடையோர்வீட்டி னெருப்பிட்டும்விடங்களிட்டும்
பாதகப்பொடிகடூவிப் பறிப்பதேயவன்றன்கேள்வி. (௩)

பத்திரமெழுதியேவற் பணியினர்போலச்சென்று
குத்திரஞ்செய்துகோளுங் குறளையுமுரைத்துமுன்னை
மித்திரர்போலப்பேசி விருந்துண்டுகளவுகொண்டு
சத்துருவாகப்பேசித் தனிப்பழிதிராநின்றான். (௪)

நிறைத்தபொய்யோலைகாட்டி நிலங்களுந்தனமுங்கொண்டு
மறைத்தவவேடங்கொண்டு வழிக்கரைவந்தியிட்டுப்
பறைச்சியைமனைவியாக்கிப் பாதகரிணக்கஞ்செய்து
மிறைச்சியுமீனுங்கள்ளு மீயலுமருந்தாநின்றான். (௫)



சுரர்களாயிவன்றன்வர்க்கஞ் சுவர்க்கத்தையடைந்தோரெல்லா
தரமிலாநரகில்வீழ்ந்தார் சசிவர்ணன்செய்தபாவ [ந்
முரண்முயலகனும்பேயு நோயுமாய்மொய்த்துவீழ்ந்தா
னரகமும்வருவனென்று நடுங்கிடத்தொடங்கிற்றம்மா. (௬)

வெறுத்திடவொருவன்செய்த பாவங்கண்மிக்கஞான்று
பொறுக்குமோதெய்வமிம்மை தன்னிலேபுடைத்துப்பின்னர்
மறுத்திடாநரகில்வாட்டும் புண்ணியமலிந்தஞான்று
நிறுத்துமோவிம்மைகாட்டு நெருப்புநீர்மிகுதிபோல. (௭)

சசிவர்ணன்றந்தையாருந் தரையிடைப்பணிந்துபோற்றி
யிசையுளதேவபத்த ரென்னுமாதவரைநோக்கி
விசையுளமைந்தன்செய்த வினையெலாம்விளங்கச்சொன்னார்
கசிவுளதேவபத்தர் கருணையாலுபதேசிப்பார். (௮)

அழுங்கியபாவவெச்ச வருண்முதுகுன்றன்முத்தி
வழங்குவான்வைத்தநந்தி வரையுநாற்காதவெல்லை
செழுந்திருமலையாள்பூசை செய்தசத்தீச்சுரத்துக்
கொழுந்துபட்டயனார்பூசை கொடுத்தபின்சிருட்டிபெற்றார்.()

பூருவமகவான்பூசை புரிந்துவானரசனானா
னேருறுமிந்திராணி பூசையாலவனைச்சேர்ந்தாள்
தாருகாசுரன்பூசித்துத் தானவர்க்கரசனானா
னுருறுவெள்ளிபூசித் தவர்புரோகிதருமானார். (௧௦)

உருவசிபூசையாலே யுயர்மகவானைச்சேர்ந்தா
ளிருமலநந்திவெற்பி னீயுநின்மகனும்போகித்
தருமதானங்கள்செய்து சத்திநாதனையும்போற்றிப்
பருவரைதனின்மானந்தி பராயணரிருப்பார்கேண்மோ. (௧௧)

அந்தமாயோகிதன்னை யானுதசேவைபண்ணின்
மைந்தனையகலுமென்றார் மறைமுனிவாக்கைநம்பி
யிந்தமால்வரையினண்ணி யீசானகங்கையாடித்
தந்தையுமகனுஞ்சத்தித் தலைவனைப்பணிந்துபோற்றி. (௧௨)

பரமதேசிகராநந்தி பராயணர்தம்மைப்போற்றி
யுரமுறப்பணிந்துசேவை யுற்றபின்மைந்தன்செய்த
கரவுடைப்பவங்கள்சொன்னான் கடைக்கணால்யோகிநோக்க
விரவுபாதகங்களெல்லா மேவிடாதகன்றதன்றே. (௧௩)

யோகிதன்பூசைக்கேற்ற வுபகரணங்கள்செய்தும்
போகமார்பசுக்கண்மேய்த்தும் பொற்பதம்பிடித்துநிற்ப
வேகியபவங்கணீங்கி வியாதியுநோயும்பேயு
மேகியதுடனேபின்னர்ப் பரிகலச்சேடமீந்தார். (௧௪)

பரிகலச்சேடங்கொண்டு பதத்தினிற்பூசைசெய்தா
னரியநீறியோகிசாத்தி யடியினைத்தலைமேல்வைத்துத்
தெரிவுறவுபதேசித்தார் திவ்வியஞானம்பெற்றுத்
தரிவுளமுத்திபெற்றான் றந்தையுமுத்திபெற்றான். (௧௫)

பிதிர்க்களுநரகம்விட்டுப் பெருஞ்சிவலோகஞ்சேர்ந்தார்
கதிர்ச்சசிவர்ணர்காதற் புலைச்சியுங்கதியிற்சேர்ந்தாள்
மதித்திருமாலேகேளீர் மாதவர்பெருமைதன்னைத்
துதிக்கரிதின்னஞ்சொல்வோஞ் சுவகையென்றுருத்திவேசி.

சசிவர்ணன் சரித்திரம்

முற்றிற்று.

---



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீதத்துவராயசுவாமிகள்

அருளிச்செய்த

# * சசிவர்ணபோதம்.

மோகவதைப்பரணியிலுள்ள

## கடவுள்வணக்கம்.

மதிபரிதியெரிநீர்கால் வானவனியியமானன் வடிவாயெல்லா, வதிபதியாயனைத்துமா யல்லாதவறிவுருவை யகத்துள் வைப்பாம். (௧)

சொல்லாற்றம் மதிவிரகாற் றாயதிதுதீயதிது வென்னுமாக்க, ளெல்லார்க்கு மதுவதுவா யிறையிருக்கும்படியேயா யிருக்கவென்றே. (௨)

கடவுள்வணக்கம் முற்றிற்று.

---

* சசிவர்ணபோதம் என்பது-சசிவர்ணனுடைய ஞானத்தை யுணர்த்தும் நூலென்றறிக.

ஷை பரணியில் பேயிரங்கலதிகாரத்

தொடர்புபாடல்.

முடிவுமாதியு மற்றமுழுமுதல்
வடிவமாகி வரும்படியெங்ஙனே. (௧)

சொல்லுகோலஞ் சுருதிவிருத்தமோ
வல்லவோவென வன்னையருளுமே. (௨)

அருவனுயினு மன்பர்க்குருவனுய்
வருவனென்பது மாமறைசொல்லுமே. (௩)

பத்தியாம்வலையிற்படும் பார்மிசை
புத்தியாலறியொண்ணுப் புராணனே. (௪)

தேவியிப்படிக்கூறத் திருவருள்
பாவியேற்கிலதென்று பதைக்கவே. (௫)

தொடர்புபாடல் முற்றிற்று.

---

நூல்.

அலகையச்சமறவகவான்களு
முலகின்முத்திபெறும்பரிசோதுவாம். (௧)

புணர்ந்தபாவமெலாம்பரிபூரண
முணர்ந்தஞானிவிழிபடவோடுமே. (௨)



வேறு.

எழிலாருஞானிபுகழென்னை கூறவுயர் வீடிவன் சொல்
வழிசெய், தொழிலாளர் சேர்கையது கேளுமுன்னை யிதிகாச
மொன்று சொலவே. (௩)

தந்தாபமற்ற பரனேவல்செய்த வவனுற்ற பேறுதனை
முன், செந்தாமரைக்கண் முதல்வற் கெம்மண்ணறிருவாய்
மலர்ந்ததிதுவே. (௪)

உவமிப்பின் ஞானிவிழிபட்டு முன்னைவினை விட்டு முத்
தியுலகிற், றவமற்ற வெய்யவினையே புரிந்த சசிவர்ணனெய்து
கதையே. (௫)

வேறு.

ஏமம்புகுவாருளபாதகரா-மியாவர்க்குளுமிக்கவனுகுமிவ,
னுமம்புகல்வார்குலமும்மெரிவாய்-நரகம்புகுமாறுநடந்தனனே.

மலமேவிய தீவினையின் வலியான்-மகிழும் பர்பதத்தி
லிருந்தவிவன், குலமேவிய தென்புலவாணர்களுங்-கொடிதாய்
நரகங்குடியேறினரே. (எ)

மிகமேவிய புண்ணியபாவமெனும் - வினையின்பயன் மே
லொருகாலமுறு, திகமேவரு மென்பதனுளநோ - யெல்லா
மிவனைச் செறவெய்தினவே. (அ)

தன்புத்திரனேயம் விடாமையினுற்-றவறுற்றவிவற் பெ
றுதந்தையுளங், துன்புற்றினி யென்னை கொலோபுதல்வன்-
றுயர்தீர்வகை யென்று சுழன்றனனே. (௯)

ஒன்றுனும் வினைத்துயர் துய்ப்பதலா - லொழிவிக்கு முபாயமுனக்கிலதே, யென்றுனு மறிந்தவனன்புவிடா-திவனை க்கொடுமுன்றன னெங்கணுமே. (௧0)

ஒருமாதவன் மற்றிவன் வேதனைகண் - டொழிவற்றுள வொன்றை யுளத்துணரும், பரமாகிய ஞானிகள் கண்ணுற லே-பரமாவிழ்த மென்று பகர்ந்தனனே. (௧௧)

தானந்த மிலாததனைத் தருவான்-சத்தீச்சுர மென்னு மிடந்தனில்வாழ், மானந்திபராயணரென்பவர்நின் - மைந்தர்க் குறுநோய்க்கு மருந்தெனவே. (௧௨)

முடியா வுபதேசமி தென்றவனு - முனிவன் பதமெய்தி மொழிந்தனனிக், கொடியான் வெருவாது குயிற்றியநோய்-கூறற்கரிதாய கொடுந்தொழிலே. (௧௩)

ஈங்குன்றிருமுன்பகரும்படியோ - விவனெய்திய தீவினை யென்ன வெலாம், நீங்கும்படி தன்னநு பூதியினு-னிகழும் விழிவைத் தனனின்மலனே. (௧௪)

கணியாதபவக் கடுவானதிருக்-கண்வைத்தலும் விட்டன காதுகடும், பிணியாவையு நல்லபிதா விறைதாள்-பேணிப்பணி யென்று பெயர்ந்தனனே. (௧௫)

இடனே முதலாகவு வந்திறையோ-னேவும்பணி செய் திவனுஞ்சிலநா, ளுடனே யிவனே திருமேனிதனக்-குரியானெ னவுற்றனனும் பனிடே. (௧௬)

நன்ருய் முனிதாள் வழிபாடதனு-ஞுவிதமான பிறப் பினைவிட், டொன்ருகியவீடுணை ருத்தமர்கட்-குளசாதன நா ன்கு முதித்தனவே. (௧௭)



முனிவன் றிருமுன்புளதன் குறைதான் * மொழிவான் சிலவஞ்சலிகுஞ்சியதாய்ப், பனிவந்திருகண்கள் பதங்களிலே பலகால் வலம்வந்து பணிந்தனனே (௧அ)

அருளே வடிவாகிய மாமுனிதா-னறியாதவர்போல வழு ங்கலுறும், பொருளே தெனமைந்தனடுங்கினனிப்-பொல்லாத பவப்புணரிக் கெனவே. (௧௯)

வெருவும் பிறவிக்கடல் வித்தரமுன்-வேதாகமகீதை விள ம்புமதைக், குருவுந்தன தன்பன் மனத்தளவிற்-கொளுமாறு தொகுத்திவை கூறிடுமே. (௨0)

வேறு.

மரணபவங்களான புனலையுடையது-மதியை விழுங்கு காம வரவுபெரியது, கரணவொழுங்கரு தவிடைய விரைநுகர் கணமொடியங்குமீன மிகவுமுகள்வதே. (௨௧)

பெருமித மென்றுகூறும் பெருமை யுடையது-பிணிக ளெனுங்கெடாத புலவுகமழ்வது, வருமிடரின்பமான திரை கள் பொருவது மனமெனும் வஞ்சராஜமகர முறைவதே. ()

அளவிலகந்தையாமை யபரிமிதமுள-தவாவு நிறைந்த வாழமறிய வரியது, களவுநெருங்கு பாருமலையு முடையது கலகவிடங்கண்மேவு கிருமிநெளிவதே. (௨௩)

துகளெனுநன்கிலாத நுரைகடருவது † துறவிமி னின்ப மான கரையை விடவகன், மகளிரெனுந்தவாதவலிய சுழியது மறலியுமஞ்சு கோபவடவை யெரிவதே. (௨௪)

---

* மொழிவான் என்பது-மொழியும் பொருட்டு என்றுகொள்க.

† துறவெனுமின்பமான கரையகழ்வது என்றும் பாடம்.

வெருவருகின்றபோக முதலையுடையது-விவிதமனந்தமா னதுறையு மறிபவ, ரொருவர் கடந்து போகவிரகிலெழுபவ வுததிவிளம்பயா வருலகிலறிஞரே. (உரு)

பொறிவழி சென்று மீளுமவலமதிகொடு-பொருசு மயங் களாறு மறிபவிழுமதி, லறிவழி வொன்றிலாத பொருளதெ னவுள-வநுபவவங்கமேறு மறிஞரகல்வரே. (உசு)

புணரிகடந்து போகவிரகிலெனமொழி-பொழுது புலம்பி பாவி புதல்வனிறுமுன, முணர்வெனும் வங்கமேறு மறிஞரகல் வரென்-றுரையை வழங்கிநாதனுவகையருளவே. (உஎ)

வே று.

வாழியெனவிறைவனடிதொழுதுவருபவமா
மாழியினையகலுமறிவருளுகெனவவரே. (உ.அ)

பரவறிவுமபரவறிவெனவுமிருபரிசாந்
திரவறிவையறியுமவர்மொழிவர்தெளிவுறவே. (உகூ)

அபரவுணர்வருமறைகண்முதலகிலகலையு
முபரமமதறவுதவுமுணர்வுபரவுணர்வே. (௩0)

ஆகமவிதங்களறிவாரபரமறிவார்
யோகமொடுறங்குமவரேபரமுணர்ந்தோர். (௩.க)

புராணமிதிகாசமெவையும்பொருளனைத்தின்
பிராணனறியாதுளவிடத்திவைபிதற்றே. (௩உ)

இயலறிவதிசையறிவதினமறிவதுளதா
மயலறிவதறிவதலவறிவறிவதறிவே. (௩௩)



நவிலுகலையறுபத்துநாலுமறிவாரும்
பவலயமதறுசுத்தபரமமறியாரே. (௩௪)

ஆகவறிவாளரறிவாரிவையனைத்து
மேகவறிவாளரிவையாவுமறியாரே. (௩ரு)

ஐயறிவறிந்தவையடங்கினவரேனும்
மெய்யறிவிலாதவர்கள்வீடதுபெறாரே. (௩சு)

மெய்மையறிவல்லதயில்வேறறிவதெல்லாந்
தம்மையறியுமறிவதேயறிவுதானே. (௩எ)

பூசனையுமதுசகலபொருளுமறிதமையு
மீசனையும்வேறதறவறிவதறிவெனவே. (௩அ)

தானெனுமுடம்பதுதனைத்தவிரவேறு
யானெனுமருத்தமுளவோவருளுகெனவே. (௩கூ)

வே று.

எனதாடை பொன்பூமகன்றையல் பாய்மா-விபங்கண் முகங்கால்கை மெய்யென்ன வென்றாந், தனதாயுரைப்பான் வகுத்திந்தவூனைத்-தானென்றயர்த்துஞ் சொலத்தக்கதன்றே.

தாளாக வூராழியார் வென்னில்வீணு-தண்டாகவன்மார் புதட்டாக மொட்டாம், நாளாமலர்ச் சென்னிகூந்தற்கொடித் தேர்-நாணுளுமூர்வானில்வேறுக நாடே. (௪க)

கடக்குஞ்சரம் பண்ணியுண்ணின் றெருத்தன்-கைபாத கன்னங்கண் மெய்போலியக்குங், கிடக்கும் நடத்தா விடத்தி வ்வுடம்புங்-கிடக்கும் மொருத்தன்னடத் தாவிடத்தே. (௪உ)

ஒரு கூறுமலமாகு மொருகூறுடம்பாகு-மொருகூறு மன
மாகு முண்டற்றவன்ன, மிருகூறுநீயாகிலொருகூறு நீயாமிழி
க்கும்மலஞ் சோரிடப் பட்டதுடலே. (௪௩)

கிளராதரத் துண்ணுமன்னஞ் சுடக்கை-கிட்டப்பொரு
தேயிருந்தார் முனிந்தார், தளராதுறப் பொன்று முயிர்போ
கவன்றே-தழற்பள்ளி மீதே துயின்றார் சகித்தே. (௪௪)

நிழற்பாவை கண்ணாடியிற் பாவைகைகா - னிமிர்க்கும்
முடக்கும் மிவன் செய்தவெல்லாந், தொழிற்பால வாமற்றிவ்
வுடலஞ் செய்தொழிலுஞ்-சுடர்ஞான வடிவானவன் செய்த
தொழிலே. (௪௫)

அறிகின்ற பொருளென்று மறிவானில் வேறே-யானுலிவ்
வூனை நானென்னலாமோ, செறிகின்ற புள்ளல்லவே கூடிவ்
வகையே-செடமான வுடனின்னில் வேறென்று தெளியே ()

நிலமாகும் வர்க்கென்ற னெகிழ்கின்ற நீரா-நெருப்பா
மிதிற்சுட்ட வெல்லாமுமநிலஞ், சலமான புரையான வானிந்த
வுடலஞ்-சடமான வைம்பூதவுருவங்கடாமே. (௪௭)

விழியைப்புமா னென்னில் ரவியாதியாலே-விளங்கின்ற
தல்லால் விளங்காமையாலே, யொழியப் படுங்கன்ன முதனூலு
முன்ற-னுருக்கண்ட கண்டன்னை யொப்பாகவுன்னே. (௪௮)

வேறு.

அழலுண் பொருள்களி லுண்பவை முக்கூறதின் முதற்
கூறணி யென்புநடுக்கூறது மச்சைக்கணியாகு, மெழில்கொ
ண்டகடைக்கூறது வாக்காயெழுமென்றே - யியனூன்மறையங்
தங்களிசைக்கின்றனதாமே. (௪௯)



உண்ணும்புனன் முக்கூறதின் முதற்கூறுவர்நீரா-முதி
ரம்நடுவிற்கூறு கடைக்கூறுபிராண, னெண்ணுமிதிலிருகூற
வை நீயாயிடினன்றோ-விறுகின்றபிராணன்னது நீயாகுவை
யிசையே. (௫௦)

பிராணனுமல்லதுஞ்சி லுணர்வின்மையால ஃதுணரும்
புலன்களொழிவாற், பிராணனதென்னின் மன்னையொழியாது
சேனைநகர்சூழ்வலஞ் செய்பொழுதே. (௫௧)

கரணமொடுங்கவாயுநிகழ்வெண்கொ லென்னிலுடல்காவ
லாகுமலதேன், மரணமடைந்ததென்று தமர்சுட்டிடாமுன்
வளைவாலின் ஞாளிகொளுமே. (௫௨)

இனமுறவெண்ணவுள்ள கரணத்திலொன்றிதெனலாலி
தென்னதெனலான், மனமுனமன்னமென்றவதனாலு மல்ல
மதியல்லவந்தவகையே. (௫௩)

இடரின்புளதாய்நிலையற்றறிவற் றெண்ணுங் கரணங்களி
லாயெவரு, மடரும்பிறவிக் கடியென்றுணரு மகங்காரமுநீயல
வென்றறியே. (௫௪)

ஐயப்படலோர்பொருணிச்சயமா யறியப்படல்யானென
தென்றமதஞ், செய்யப்படல்செய்வதுசிந்தனையாஞ்சித்தமது
வன்றெனநீதெளியே. (௫௫)

முன்னாகவுடம்பதுசித்தமதே முடிவாகமொழிந்த பொ
ருட்டிரடா, னின்னாகிலநீயறியும்பொருளாய் நிகழ்கின்றதனா
லெனநின்மலனே. (௫௬)

உன்னாலறியப் படுமியாவையு முன்னுருவன்றெனவோ தினை யொக்குமெனக், கென்னாலறியாதொழியும் பொருளோ யானுருவதென்றனனென்றனுமே. (ருஎ)

அறியாப்பொருள் காரணமாயைகுறித்தறியும் பொருள் காரியமாமூலகிந், நெறியாற்றிகழ்நான் மறையந்தமெலாம்நீயன் றெனவோதுநிரந்தரமே. (ருஅ)

அறியும்பொரு ளன்றறியாப் பொருளன்றறிவாகிய நீ யெனுமப்பொருடான், பொறியின்வழிநின்றறியும்பொருளோ போதக்கண்விழித் தறியும்பொருளே. (ருகூ)

வேதப்பொருடானிது வேறுசொனும்வினையாவையுமன் றொருவேறுமிலாப், போதப்பொருளந்தமறைக்கணியாம், புனிதப்பொருடத்வமசிப்பொருளே. (கூ0)

வேறு.

நிமலமாம்பரமதுவெனும்பொரு ணீயெனும்பொருள்சிவனே, யமலமானவிரண்டயிக்கிய மசிபதப்பொருளாவதே. ()

அருமையாகிய பிரமமுன்னிலை யாகுமாருயிர் பின்னிலை, யிருமையா னவிரண்டயிக்கியமெய்துமாறெவனென்னவே. ()

உபாதிபால்வருபேத மேயிவர் பேதமன்றுருவுயிரினின், கபாதியாமுடல்போலிறைக்குள காரணாதிகள்காயமே. (கூஙு)

ஈசன்முற்றறிவான் வியாபியெவைக்கு மேதுவியம்புமா, காசகன்னிருபாதிபாவனை காரணாதிகளாவதே. (கூச)

நீதியாலிருபாதிநீக்கிட நீயெனச்சொல்பதத்தினு, மாதியாகியதத்பதத்து மசுத்தசுத்தமுரைத்துமே. (கூரு)



ஆகமுன்றிகழேழு நானெனல் த்வம்பதத்திலசுத்தமே, சோகமின்றியசாட்சிநானெனல் த்வம்பதப்பொருள்சுத்தமே.

அகிலகாரணமாதிநானெனல் தற்பதத்திலசுத்தமே, சகலகாரணசாட்சிநானெனல் தற்பதப்பொருள்சுத்தமே. (கூஎ)

செறிந்த காரணகாரியங்கள் சிதைந்துமேலுறு சித்ததா, யறிந்தவாதனை தானுமற்றதவ் வசிபதப்பொருளாவதே. (கூஅ)

அசுத்தமாகிய திருபதத்தினு முக்கியப்பொருளாவதே, விசுத்தமானதிலக்கியப்பொரு ளென்றுசொல்லுவர் விமலரே.

முரண்டசீவபரங்கடம்முடன் முக்கியப்பொருளாவதே, யிரண்டில்வேறற சிற்சொரூபமிலக்கியப் பொருளாவதே. ()

வாக்கியப்பரசீவர்தங்க ளுடம்பிரண்டு மிலக்கணா, வாக்கியப்படி நீக்கினலொரு வஸ்துவேபரவஸ்துவே. (எக)

ஒரில்விட்டதும் விட்டிடாதது முபயமும்மென வுணர்வுளோர், தேரிலக்கணை திரிவிதத்திலிசைப்பர் மற்றதியம்புவாம்.

மஞ்சுகூப்பிடு தென்றல்போலவும் வடபகீரதியுள்ளதே, விஞ்சுகோசமதென்றல்போலவும் விட்டலக்கணையாவதே. ()

சிவலைநின்றதுவெள்ளை போயினதென்று செப்புதல்போலவே, கவலையின்றிவிடாதலக்கணையென்று நீகொள்கருத்திலே.

மேவும்விட்டு விடாதலக்கணை மெய்மையாதெனிலந்தவித், தேவதத்தனெ னும்பொருட்படி சிந்தைசெய்திடுதிரவே.

விட்டலக்கணைதனையும் விட்டுவிடாதலக்கணைதனையும்நீ, விட்டுவிட்டுவிடாதலக்கணை யால்விளங்குவிளங்கவே. (எசு)

போதுமேவிய தேசம்விட்டொரு புருடனைக் கொளு
மாறுபோ, லோதுமீருடல்கண்டுவிட்டத னுண்மைகாணவுணர்
ந்திடே. (எஎ)

வேறு.

பிரியாவுயிர் காரியமாமுடலும் பிரமத்துறுகாரண மா
முடலுங், கரியாகிய வாதனையுங்கழியக் காட்டும்படி கண்டு
கொள் கண்ணுறவே. (எஅ)

கரணத்திரணிற்பினு மப்பொருளைக் காணக்கிடையாத
வைகையறவே, மரணப்படினும் மதுகண்டுகொளும்வழியில்லை
யெனும்படி நீமதியே. (எகூ)

எந்தக் கரணங்களுமேவனனு விதில்வாதனையால் விட
யங்களொடே, யந்தக்காணங்கள் பொருந்தல்கனு வவைமாய்
தல் சுழுத்தியவத்தையதே. (அ0)

வேறு.

வினவிற்பரத்தையறிவுறுதற் கவத்தைபுலன்வினை மாறி
யே, நனவிற்சுழுத்திநிலைவரி னப்பொருட்டிகழு நலமாகவே.()

திவிதத்தவத்தைகளையறிவுற்றவத்துரியநிலைசிவனே, யிவி
தத்திலப்புருடனனவுற்றவத்துரிய நிலைசசனே. (அஉ)

அகிலக்கரிப்பரம துரியப்பொருட் டுரியமது வாகையே,
புகலுற்றதத்வமசியெனு முப்பதத்தின்முடிபொருளாவதே. ()

நிமலப்பொருட்சுருதிநெறியிற் பெறக்கருணைநிதிகூறவே,
யமலப்பொருட்பெறுதலருமைந்தெனக் கழறியடிவீழவே. ()



தமரக்கலைக்களவு தெரிவற்றதற்பொருள்கடனை யீகுவா,
னமரர்க்களப்பரியபதநற்புனற்கொடுசெய்தபிடேகமே. (அரு)

பவளத்தில்வைத்தவமிர்தினின் மிச்சிலிட்டினிய பரிவோ
டுமா, தவளப்பொடிக்கவசமெனவிட்டுடற்பகைகடலைசாயவே.

உதகத்துடற் பொருளொடுயிர் கைக்கொடுச்சிமிசை
யொருபோதொடே, பதகத்தலத்தைவிட விருகைத் தலத்
தொடிருபதமேவியே. (அஎ)

ஒழியப் புலக்கணுப நிடதப்பொருட்டெரிய வுளஞான
மாம், விழியைக்கொடுத்துமொழி யெனமுப்பதப்பொருளும்
வெளியாகவே. (அஅ)

நனவைத்துவக்கிமுடி துரியத்தைமுற்றவிறைநவினீதியே,
மனவர்க்கமற்றவநுபவமுற்றசிற்ககனவலியோதுமே. (அகூ)

வேறு.

புரணமாகவேபுறம்புளபுலன்களுமந்தக்
கரணமியாவையும்வழங்கிடம்நனவெனக்கண்டேன். (கூ0)

புரணமாகியபுறம்புளபுலன்கெடவந்தக்
கரணமியாவையும்வழங்கிடங்கனவெனக்கண்டேன். (கூக)

மரணமாகியதிசையிதுவெனும்படிமனுதி
கரணமியாவையுமிறந்துளசுழுத்தியுங்கண்டேன். (கூஉ)

எஞ்சலின்றியெக்கரணமுமிறந்திருண்டிருந்த
துஞ்சலங்குணர்போதமாந்துரியமுங்கண்டேன். (கூங)

துரியமாகியபோதமோர்துளக்கமற்றனைத்தின்
கரியதாயிருந்திடம்பரனனவெனக்கண்டேன். (கூச)

புணர்ந்தவிச்சகத்தொழித்துணர்போதமாந்தனையே
வுணர்ந்தமற்றதுபரன்கனவெனும்படியுணர்ந்தேன். (௯௫)

சான்றுசாக்கியமிறந்திடத்தானிருந்தமையுந்
தோன்றுருவிடம்பரன்சுழுத்தியதெனத்துணிந்தேன். (௯௬)

மரித்ததென்றுணர்ந்துரைத்ததும்மரித்திடந்தனிலே
தெரித்தபோதமேததுபரன்றுரியமாய்த்தெளிந்தேன். (௯௭)

இறையெனும்பொருட்டுரியமேயென்னையாண்டவனே
மறையினந்தநற்பதப்பொருணனவெனமதித்தேன். (௯௮)

பண்டைவிச்சுவவாதனைப்பழுதுபோய்முழுதுங்
கண்டகண்ணதேயாகியகனவதுங்கண்டேன். (௯௯)

காட்சியாவையுங்கண்ணதாயக்கணுங்கரைந்த
மாட்சியாகியவகோசரமுறக்கமாய்மதித்தேன். (௧௦௦)

அருந்தவாமறையந்தமாமகோசரந்தனினி
யிருந்தவாறறிவித்தவாறெங்ஙனமிசைப்பேன். (௧௦௧)

எம்பிரானிடந்தொறுமிடந்தொறுமதுவதுவாய்த்
தம்பிரானடஞ்செயும்வகைசாற்றுமாறறியேன். (௧௦௨)

ஆவியேயடியேன்செய்கைம்மாறுனக்கென்னெனிற்
பாவியேனதுதானுமுன்னுடையதாம்பண்டே. (௧௦௩)

ஆவல்செய்தெனதாக்கையுள்ளளவுநின்னடியார்க்
கேவல்செய்வதேயன்றிமற்றொன்றுநானறியேன். (௧௦௪)

இறவிலெப்பதமும்பெறவேண்டிலேனென்றும்
பிறவிவேண்டுவனின்றிருப்பணிசெயப்பெறினே. (௧௦௫)



வேறு.

என்றுபலகால்விழுமெழுந்தொழு மழும்புரியுமென்னையினியா
னின்றுபலவாகவுரைசெய்தவவ னன்பினெடுநெஞ்சுருகியே. ()

எட்டிலறிவின்றியிறைதன்னிலறி வின்றியிவ்வுடம்பினுடனே
வீட்டினுறைவானையினிவீடுபெறு மென்பதுவிளம்புகிலமே. ()

வஞ்சவலியானரகில்வீழ்பிதிரரந் நரகுபாழ்படமிகா
விஞ்சைவலியாலடையவேறினர் சுராதிபர்கண்மேலுலகமே. ()

தேவருமனித்தருமிவன்றொழில் வியந்துரைசெயப்படுவதோ
மூவரும்வணங்கிமுடியா லவனதேவல்செயமுந்துறுவரே. ()

ஞானியைநரன்சுரனெனுதொழிக ஞாலமுயநாதனருளான்
மேனியதுகொண்டுதனைநல்க வருமென்றறையும்வேதமுடிவே.

ஆக திருவிருத்தம்-௧௧௦.

சசிவர்ணபோதம் முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

## ஸ்ரீதத்துவராயசுவாமிகள்

அருளிச்செய்த

# துவாதசநாமசங்கீர்த்தனம்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பேச வாதிமறை நாலு மோர்விரகு
பேசி லாமைநனி பேசு பாதநம
கூச வானவர்கள் கூற யானுனடி
கூறு மாறுனருள் கூரு கோலநம
தூச வாபரண மார மாலைதரு
சோபை மாதருட றாய்தில் பாதவரை
கேச வாதியென வேசு வாய்மையருள்
கேச வாயநம கேச வாயநம. (க)

வே று.

ஆராய வேதமுடி வானுத பாதநம
வாசாபி சாசமற வேயாளு பாதநம
சீராய வானவர்க டேவாதி தேவநம
தேனுரு பாதமலர் சீராக வோதுதொறு



நீராய வாணவரை நேர்காணு பாதநம
நீதான தாகுமென நேரோது மாசில்பொரு
ணூராய ணுயபத மாநாட வோதிநம
நாராய ணுயநம நாராய ணுயநம. (உ)

வே று.

வாத வாதரறி யாத பாதநம
மாகர் நாடரிய வேக பாதநம
வோது வாரரிய வேத நாலுமன
போர்வு ருதனென வோது பாதநம
சீத வாதவழல் சேரு மாதவர்கள்
சேரு மாறுனடி தேரு மாறருளி
மாத வாவிலழி வேலை யாளுநம
மாத வாயநம மாத வாயநம. (ங)

வே று.

தாரம் போதுபொரு டானென் றேுதிநம
தாரம் பாலர்பலர் சார்பென் றேுதிநம
வீரம் போதுதலை மீதந் தாளுநம
வேகம் போதிலெரி மாகங் காலவணி
நாரம் போதகனு மாவிங் கோதிநம
ஞானம் போயழிய நாசஞ் சேரியம
கோரம் போகவேலை யாளுங் கோலநம
கோவிந் தாயநம கோவிந் தாயநம. (ச)

வே று.

கட்ட மாம்வினை கைத்த தாணம
கத்தும் வாதியர் கைப்ப டாய்நம
விட்ட மானவர் பத்தி யாய்நம
வெற்றி யாளவல் வித்த காநம
வெட்டு மாவுரு வத்த னேநம
வெட்டொ ணுவரு வத்த னேநம
வெட்ட மாவர கிட்டு வாய்நம
விட்டு வேநம விட்டு வேநம. (௫)

வே று.

பிறைசூடு வோனுமரி பிரமாவு மாதிநம
பெருவான மாதிநில வரைநாச காரிநம
துறைகூறு வாதருள மிருளான பாதநம
சுருபாவெ ணுவுருகு மவர்காணு சோதிநம
வறைகூவி நாயனைய வெனையாளு பாதநம
வமரேச ராலுமறி வரிதாய பாதநம
மறைசூடி காபரண வணியான பாதநம
மதுசூத ணுபநம மதுசூத ணுபநம. (௬)

வே று.

புரையற்றி யாவையினு நிலையுற்ற பாதநம
புகழுற்ற தோறுமுடல் புளகித்து ணேயமொரு
கரையற்ற மாதவர்க டமைகைத்த லாமலக
கனியொக்க நாடிமிகு களியுற்ற பாதநம



வுரையுற்ற தாயுமறை யுணர்விற் படாததென
வொழிவற்ற சோதிவர வழியிட்ட வீரநம
திரையற்ற வார்கலிய தெனவைத்த பாதநம
திரிவிக்ர மாயநம திரிவிக்ர மாயநம. (௭)

சோம ணுதிசுடர் பூமு ணுயபொரு
டோமி லாதவுயிர் தோறு மேவிநம
நாம நாடுருவம் யாவு மாகியொரு
நாம ரூபமறு நாத பாதநம
தாய்மு ணுகிவரு சார்பி யாவுமின
தாள லாதறிவி லாத தாபதர்கள்
வாய்ம ணுலயம்வி டாத சோதிநம
வாம ணுயநம வாம ணுயநம. (௮)

வேத ராகியுடன் வீடு சேரும்வகை
மேவு மாதரவி ணுர்க ளாயகில
பூத ராலும்வழி பாடு மேவுமிரு
போதெ ணுவுமுரை யாடு மாயநம
மாத ராதலம வான நாடர்தொழு
மாக ராசர்பத மாய்வி லாமையில
சீத ராதரவில் வீத ராகரறி
சீத ராயநம சீத ராயநம. (௯)

வே று.

கழல்சூடு வாரிதய கமலால யாயநம
கலிகாலன் வாயின்மணை யிடுகால காலநம

வழல்சேர்மு னேயழியு மெழுகாக வேயுருகு
மடியார்க டாமறிய வுளதான பாதநம
குழல்சேரு மாறின்மொழி மடவார்கள் காதன்மிகு
கொடியேனை யாளவொரு குருவான கோலநம
வெழில்சேரு மாமுனிவர் தொழுமாதி நாதநம
விருஷிகேச வாயநம விருஷிகேச வாயநம. (க0)

சித்தரா னுர்களறி சிற்பிரகா சாயநம
செற்றமார் வாதின்மயல் செற்றதா டாளநம
மத்தரா யோதுபத கத்தில்வா தேயொழிய
மற்றிலா தாரமருள் வைத்தமா மாயநம
நித்தமா வேவல்செய்து நிற்கநே ராதுனடி
நித்தமா மேவல்செய்து நிற்கமா லாகுமதி
பத்தரா னுர்கள்பெறு பத்மபா தாயநம
பத்மநா பாயநம பத்மநா பாயநம. (கக)

ஆமுதை தீயவனி யாகாச மாகிநம
வானுலு நீமுழுது மாகாத சோதிநம
சீமுத வாகனன்மு னும்வானு ளோர்பரவு
தேவேச ராலுமறி வாகாத தேசநம
மா * மூது நான்மறைகள் வாசாம கோசரமென்
வாடாத பாதமலர் வாயாரவோது ‡ தொறுந்

---

* முதுவென்பது-மூதென நீட்டல் விகாரமாயிற்று.

‡ தொறுமென்பது-தொறுவென முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.



தாமுது காரமென லாநேசர் சார்புநம
தாமோத ராயநம தாமோத ராயநம. (கஉ)

கலித்துறை.

கேசவ னாராயணன் கிளர்மாதவன் கேடொன்றிலாத்
தேசமர் கோவிந்தன் விட்டு மதுத்திரி விக்கிரமன்
வாசமுன் வாமனன் சிதரன் மன்னு மிருடிபத்ம
னுசமி ருமோ தரனுரு வாய்நின்ற நாமங்களே

துவாதசநாமசங்கீர்த்தனம் முற்றிற்று.

---



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அஷ்டாஷ்ட மூர்த்தங்களாகிய

# சிவபராக்கிரமம்.

ஒப்பு ஒதி முதலீறில்லாத சிவபெருமான் தம்மடியார்க்கு அநுக்கிரகஞ் செய்யும்வண்ணஞ் சகளீகரித்த அறுபத்து நான்கு மூர்த்தங்களே சிவபராக்கிரமம் எனப்படும். இவ்வரிய நூலைச் சிறந்த செந்தமிழ்நடையில் செவ்வனே பயின்று பன்னூல்கள் உரையெழுதியும், சில நூல்கள் மொழிபெயர்த்தும் விளங்கும் சென்னை கிறிஸ்டியன்காலேஜ் மாஜி தமிழ்ப்பண்டிதரும் சைவப்பிரசாரணருமாகிய ஈக்காடு. இரத்தினவேலுமுதலியார் அவர்களால் தமிழ் வசனநடையிலியற்றி அவ்வவ்வற்புதங்களை நேரிற்கண்டனபோல விளக்கத்தக்க 64-திவ்ய திருவுருப்படங்கள் சிற்பநூல் விதிவழுவாது எழுதியமைத்து, முக்கியமான யிடங்களில் வேதம், உபநிஷதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய பல வடநூல் மேற்கோள்களும், தமிழ்நூல் மேற்கோள்களும் காட்டி அச்சிட்டு அழகாகப் பயிண்டுசெய்துள்ள இந்நூல் இன்றியமையாதது. இதிலுள்ள திருவுருவங்கள் பூசிக்கத்தக்கன.

புத்தகத்தின் விலை ரூபா-2.

இப்படிக்கு,

**அ. முத்துவடிவேல் முதலியார்**

நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி,

சென்னை.